மலர் 14 இதழ் 183

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 18 காசு

Regd. No. M 7897

Phone No. 76190, 76195



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 16—3—74 சனி

வெளியூர் 17—3—74 ஞாயிறு



# பென்ஷன் உயர்வு கருணாநிதி அறிவிப்பு



சென்னை, மார்ச் 16— பென்ஷன் பெற்றுவரும் ஓய்வு பெற்ற அரசு ஊழியர், ஆசிரியர் ஆகியோருக்கு ஏப்ரல் 1-ந் தேதி முதல் ரூ. 5 பஞ்சப்படி உயர்வு அளிக்கப்படும் என்று தமிழக சட்டசபையில் முதலமை[...]ர் கருணாநிதி இன்று அறிவித்தார்.

முதலமைச்சர் கருணாநிதியின் அறிவிப்பை உறுப்பினர்கள் கைதட்டி வரவேற்றனர்.

பென்ஷன்தாரர்களுக்கு ஏற்கெனவே ரூ. 15 பஞ்சப்படி அளிக்கப்பட்டு வருகிறது. ஏப்ரல் 1-ந் தேதி முதல் அவர்களுக்கு மேலும் ரூ. 5 பஞ்சப்படி உயர்வு அளிக்கப்படும்என்று முதல்வர் கருணாநிதி அறிவித்தார்.

இதன் மூலம் பென்ஷன் தாரர்களின் பஞ்சப்படி ரூ. 20 ஆக உயருகிறது.

கடந்தவாரம் முதலமைச்சர் கருணாநிதி தமிழக அரசின் பட்ஜெட்டை தாக்கல் செய்தபோது தமிழக அரசு ஊழியர்கள், அரசினர்கள் ஆகியோருக்கு ஏப்ரல் முதல் தேதியிலிருந்து ரூ. 10 பஞ்சப்படி உயர்வை அளித்து அறிவிப்பு வெளியிட்டது நினைவிருக்கலாம்.

இப்போது அவர் பென்ஷன் தாரர்களுக்குப் பஞ்சப்படி உயர்வை அறிவித்துள்ளார்.

## பஞ்சப்படி

மத்திய அரசாங்கம் ஏற்கெனவே 2, 3 தடவை பஞ்சப்படி உயர்வு அளித்துள்ளது. மாநில அரசு ஊழியர்களுக்கும் ஏன் இவ்விதம் அளிக்கக்கூடாது என்று சட்டசபையில் ஹாண்டே (அ. தி. மு. க) கேட்டார்.

இதற்குப் பதிலளித்து முதலமைச்சர் கருணாநிதி கூறியதாவது:— மத்திய அரசு அவ்விதம்அளித்திருப்பது உண்மையே. மாநில அரசு ஊழியர்களுக்கும் இவ்விதம் உயர்வு அளிப்பதற்கு நிதி உதவி கொடுக்கவேண்டும் என்று எல்லா மாநில அரசுகளும் மத்திய அரசிடம் வற்புறுத்தியுள்ளன. ஆயினும் நம்முடைய நிதி வசதியையும் மீறி இப்போது பஞ்சப்படி உயர்வை அளித்திருக்கிறோம். இந்த விவரங்களை ஏற்கெனவே நான் பட்ஜெட் உரையில் விவரித்திருக்கிறேன்.

இவ்வாறு கருணாநிதி கூறினார்.

# நைரோபியில் எம்.ஜி ஆர்: உற்சாகமான வரவேற்பு

நைரோபி, மார்ச் 16—மொரிஷியஸ் நாட்டின் குடியரசுதின விழாவில் கலந்துகொண்டு எம். ஜி. ஆர். தான்சேனியாவின் தலைநகரான நைரோபிக்கு வந்தபோது அவருக்கு உற்சாகமான வரவேற்பு அளிக்கப்பட்டது.

மொரிஷியஸ் விடுதலை நாளான மார்ச் 12ம் தேதி போர்ட் லூயில் நடைபெற்ற பல வி[...]க்களில் எம்.ஜி.ஆர். கலந்து[...]காண்டார். அவருடன் அதிமுக கலைத்துறை செயலாளர் ஆர். எம். வீரப்பன், மணியன், ஒளிபதிவாளர் தம்பு ஆகியோரும் கலந்துகொண்டனர்.

மொரிஷியஸ் நாட்டு விடுதலை நாள் விழாவில் கலந்து கொண்டுவிட்டு எம். ஜி. ஆர், அங்கிருந்து தான்சானியாவிற்குப் பயணம் ஆனார்.

தான்சானியாவின் தலைநகரான நைரோபியில் விமான நிலையத்தில் அவரும் அவரது குழுவினரும் இறங்கியபோது உற்சாகமான வரவேற்பு அளிக்கப்பட்டது.

எம். ஜி. ஆரோடு கூட்டுச் சேர்ந்து "கிழக்கு ஆப்பிரிக்காவில்ராஜு" என்ற படத்தைத் தயாரிக்கும் கொஞ்சப்பா இன்டர் நேஷனல் நிறுவனத்தின் டைரக்டர் ஜோசப் எம். முக்வே மற்றும் தமிழ் மக்கள் கூடி எம் ஜி. ஆரை விமான நிலையத்தில் வரவேற்றனர்.

தான்சேனியா கலைத்துறை அமைச்சரை எம். ஜி. ஆர். சந்தித்துப்பேசினார்.

இன்று முதல் "கிழக்கு ஆப்பிரிக்காவில் ராஜு" படப்பிடிப்பிற்கான இடங்களை



எம். ஜி. ஆ[...] பார்வையிடுகிறார்.

படப்பிடிப்பு இ[...]ங்களை பார்வையிட எம். ஜி ஆருக்கு விசேஷ விமானம் ஏற்பாடு செய்யப்பட்டு உ[...]ளது.

## ரூ. 5 ஆயிரம் உதவி

எம். ஜி. ஆருடன் அதிமுக துணைப் பொதுச் செயலாளர் மனோகரன் டெலிபோனில் பேசினார்.

அப்போது குடியாத்தத்தில் தீ விபத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு அண்ணா தி. மு. கழகத்தின் சார்பாக 5 ஆயிரம் ரூபாய் நிதி அளிக்கும்படி எம். ஜி. ஆர். தெரிவித்து இருக்கிறார்.

மேலும் சென்னை காமதேனு தியேட்டரில் இன்று முதல் ஒருவார காலம் "உலகம் சுற்றும் வாலிபன்" திரைப் படம் திரையிடப்படுகிறது. இந்த ஒரு வாரம் வசூலாகும் தொகையை அப்படியே குடியாத்தம் தீ விபத்து நிவாரண நிதிக்கு அளிக்கும்படியும் எம் ஜி.ஆர். கூறியுள்ளார்.

5-ம் பக்கம் பார்க்க

# போலீஸ்காரர்களுக்கு மனோதத்துவ பயிற்சி?

சென்னை, மார்ச் 16— போலீஸ்காரர்களுக்கு மனோதத்துவப் பயிற்சி தரப்படுமா? என்று இன்று சட்டசபையில் கேட்கப்பட்ட கேள்விக்கு முதல்வர் கருணாநிதி பதில் அளித்தார்.

ஆவடி அருகே அலமாடியில் காவலர் பயிற்சிக் கழகம் ஒன்றை அமைக்க யோசனை இருப்பதாக கருணாநிதி கூறினார்.

டென்னிஸ்(பழைய காங்):- இது குறித்து எப்போது நடவடிக்கை எடுக்கப்படும்?

முதலமைச்சர்:-இதுகுறித்து போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் யோசனை தெரிவித்து இருக்கிறார். விரைவில் நட[...]க்கை எடுக்கப்படும்.

பரந்தாமன் (தி.மு.க.):— வேலூரில் தரப்படுவது

7-ம் பக்கம் பார்க்க

## ஆசிரியர்களுக்கு

# உடனடி ஓய்வுத் தொகை கிடைக்க அரசு உத்தரவு

சென்னை, மார்ச் 16—ஓய்வு பெறும் ஆசிரியர்களுக்கு உடனடியாக ஓய்வுத்தொகை கிடைக்க வழி செய்து அரசு உத்தரவு போட்டுள்ளது.

ஓய்வு பெறும் ஆசிரியர்களுக்குப் ஓய்வுத் தொகை அளிக்க அக்கவுண்டண்ட் ஜெனரல்(ஏ.ஜி)ஆபீசிலிருந்து அனுமதி வரவேண்டும் என்ற நிலைமை இப்போது உள்ளது.

இனிமேல் ஓய்வுபெறும் ஆசிரியர்களுக்கு அவர்களுக்கு உரிய ஓய்வுப் பணத்தில் 80 சதவிகிதத்தை உடனடியாக வழங்க ஆரம்பிக்க மாவட்ட கல்வி அதிகாரிகளுக்கு உத்தரவு போடப்பட்டுள்ளது என்று தமிழக சட்டசபையில் இன்று முதலமைச்சர் கருணாநிதி அறிவித்தார்,

ஓய்வு பெறும் அரசு ஊழியர்கள் உடனடி ஓய்வுத் தொகை பெற ஏற்கெனவே இவ்வித ஏற்பாடு உள்ளது. அதேஏற்பாடுஇப்போது ஓய்வு பெறும் ஆசிரியர்களுக்கும் விஸ்தரிக்கப்படுவதாக முதலமைச்சர் கருணாநிதி தெரிவித்தார்.

## அ. தி. மு. க. வுக்கு ஆதரவு எதிரொலி:

# புதுவை காங்கிரஸ் கூட்டணி உடைகிறது

புதுவை, மார்ச் 16— புதுவையில் இரு காங்கிரஸ் கட்சி கூட்டணியில் பெரும் விரிசல் ஏற்பட்டு, உறவு முறியக்கூடிய நிலைக்கு முற்றிவிட்டது.

புதுவையில் அ. தி. மு. க. ஆட்சியை மறைமுகமாக இ. காங்கிரஸ் கட்சி ஆதரிக்க முயற்சிப்பதின் விளைவாக இரு காங்கிரஸ் கூட்டணி உடையக்கூடிய நிலை ஏற்பட்டுள்ளது.

இதுகுறித்து புதுவை காங்கிரஸ் கட்சித் துணைத் தலைவர் அன்சாரி துரைசாமியை இன்று நமது நிருபர் சந்தித்தார்.

நேற்று ஒரு மாலைப் பத்திரிகையில், "இ. காங்கிரஸ மறைமுகமாக புதுவையில் அ. தி. மு. க. ஆட்சி அமைய ஒத்துழைப்புத் தந்து முயற்சி செய்துவருவதாக அன்சாரி துரைசாமி கூறியதாகச் செய்தி வெளியாகியிருந்தது.

இது பற்றி நமது நிருபர் அவரிட[...] கேட்டபோது, அந்தச் [...]தியை அவர் மறுக்கவில்லை. ஒப்புக்கொள்ளவும் இல்லை. என்றாலும், "வருகிற 26-ம் தேதி சட்டசபை கூடும்போது, எல்லாம் வெட்ட வெளிச்சமாகிவிடும்" என்றார்.

இந்த ரகசிய உறவு (அ. தி. மு. க.—இ. காங்கிரஸ) கண்டிக்கத்தக்கது என்று கூறிய அன்சாரி துரைசாமி, இது குறித்து விரைவில் காமராஜரைச் சந்திக்க இருப்பதாகவும் தெரிவித்தார்.

புதுவை சட்டசபையில் அ.தி.மு.க. வின் பலம் என்ன என்பதை அறியும்வகையிலும் மற்றும் சில பிரச்னை குறித்தும் புதுவை கவர்னருக்கு தாம், 14-ம்தேதி ஒரு கடிதம் எழுதியதாகவும் அதற்கு இது வரை பதிலில்லை என்றும் அன்சாரி துரைசாமி கூறினார்.

புதுவையில் இ. காங்கிரஸ் உறவுடன் அ. தி. மு. க. ஆட்சி அமையுமானால், புதுவையில் மட்டுமின்றி, தமிழகத்திலும் காங்கிரஸ் உறவு முறியக்கூடும் என்று அவர் சூசகமாகத் தெரிவித்தார்.

இது குறித்து ப. காங்கிரஸ பிரமுகர்கள் பலர் கருத்துத் தெரிவித்தபோது, இ. காங்கிரசின் இந்த ரகசியமுயற்சியினால் "புதுவையில் இரு காங்கிரஸ கூட்டணி உடைந்து விட்டது" என்ற பொருள்படவே கூறினார்கள்.

## திரை உலகம்

இன்று வெளிவரவேண்டிய சினிமா செய்திகள் நாளை (ஞாயிறு) வெளிவரும்

# கொலை முயற்சி: மொரார்ஜி குற்றச்சாட்டு

ஆமதாபாத், மார்ச் 16—"நான் தங்கியிருந்த கட்டிடத்தில் ஒரு கூட்டத்தினர் புகுந்து தாக்குதலில் ஈடுபட்டனர். அதனால் எனது உயிருக்கு ஆபத்து ஏற்பட்டது" என்று முன்னாள் மத்திய மந்திரி மொரார்ஜி தேசாய் புகார் கூறினார்.

குஜராத் சட்டசபை கலைக்கப்படவேண்டுமென்றகோரிக்கைக்காக கடந்த 6 நாட்களாக ஆமதாபாத் நகரில் உண்ணாவிரதப் போராட்டம் நடத்திவந்த மொரார்ஜி தேசாய் இன்றுகாலை உண்ணாவிரதத்தை நிறுத்தினார்.

குஜராத் சட்டசபை கலைக்கப்பட்டுவிட்டதாகநேற்றிரவு மாநில கவர்னர் அறிவித்தார்.

குஜராத் சர்வோதயத்தலைவர் ரவி சங்கர் மகாராஜ் அளித்த தேன்கலந்த சாத்துக்குடி பழ ரசத்தை அருந்தி. மொரார்ஜி அ[...]டைய உண்ணாவிரதத்[...] நிறுத்தினார்.

அப்போது பழைய காங்கிரஸ தலைவர்களும், திரளான பொது மக்களும் கூடியிருந்தனர்.

குஜராத் சட்டசபை கலைக்கப்பட்டது. மக்களின் போராட்டத்திற்கு கிடைத்த வெற்றியாகும் என்று அப்போது பேசுகையில் மொரார்ஜி தேசாய் கூறினார்.

அவர் மேலும் சொன்னதாவது:—

"வெற்றி கிடைத்துள்ள சமயத்தில் மாணவர்கள் தவறாக நடந்துவிடக்கூடாது.

சட்டசபை கலைக்கப்பட்ட தகவல் எட்டியதும், நேற்றிரவு குஜராத் வித்தியா பீடத்திற்கு (மொரார்ஜி உண்ணாவிரதம் நடத்தி வருகிற இடம்) ஆயிரக் கணக்கான மக்கள் வந்து வன்முறையில் ஈடுபட்டனர். வித்தியாபீட கட்டிடத்திற்கு சேதம் ஏற்பட்டது. எனது உயிருக்கும் ஆபத்து ஏற்பட்டது.

என்னுடைய அறையிலிருந்து வேட்டியையும், குல்லாயையும் பறித்துச் சென்றார்கள். இதெல்லாம் மாணவர்களின் செயலாக இருக்க முடியாது." என்றார் மொரார்ஜி தேசாய்.

போன்[...]தான் அலமாடியிலும் [...]பயிற்சி அளிக்கப்படுமா? அலமாடியில் பெண்களுக்கும் பயிற்சி அளிக்கப்படுமா?

முதலமைச்சர்: வேலூரில் அளிக்கப்படுவது போன்ற பயிற்சியை யாரும் விரும்பமாட்டார்கள். அங்குகாற்று வசதியோ அல்லது சுகாதார வசதியோ போதுமான அளவுக்கு இல்லை. அங்குள்ள [...]டிடம் திப்பு சுல்தான் காலத்தில் கட்டப்பட்டது. ஆகையால் போதிய சுகாதார வசதிகள் உள்ள இடத்தில் பயிற்சி தரவேண்டும் என்பதற்காக அலமாடியில் இந்த பயிற்சிக் கழகம் ஏற்படவிருக்கிறது. காவல் துறையில் பெண்களும் சேர்க்கப்பட்டு வருகிறதால், அவர்களுக்கும் அங்கு பயிற்சி தரக்கூடிய சூழ்நிலை உருவாகியுள்ளது.

சுரேந்திரன் (புது காங்):— பயிற்சி பெறுகிறவர்களுக்கு மனோதத்துவப் பயிற்சியும் சொல்லித் தரப்படுமா?

முதலமைச்சர்:— மனோதத்துவப் பயிற்சி அளிக்கப்படுவது இல்லை. ஆனால் கராத்தே பயிற்சி தரப்படுகிறது. கராத்தேயில் மனோதத்துவ பயிற்சியும் அடங்கியிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

வீராசாமி (திமுக):— முதலமைச்சரின் பதிலிலிருந்து வேலூர் பயிற்சி நிலையத்திற்கு ஏதோ ஆபத்து ஏற்பட்டுள்ளதாகத் தெரிகிறது. ஆகவே வேலூரில் போலீஸ பயிற்சி நிலையத்தை தொடர்ந்து அங்கே வைத்துக்கொண்டு அலமாடியில் புதிதாக பயிற்சி நிலையம் அமைக்கப்படுமா?

முதலமைச்சர்: வெளிநாடுகளிலிருந்துகூட பலர் பயிற்சி பெற வருகிறார்கள். அவர்கள் சென்னைக்கு வந்து வேலூருக்குப் போக சிரமப்படுகிறார்கள். ஆகவே அலமாடியில் இதை ஏற்படுத்த இருக்கிறோம். வேலூரில் ஒரு பழைய கட்டிடம் காலியாகிறது என்று நிம்மதியாக இருக்கலாம்.

## பாண்டிச்சேரி சட்டசபையில்

# சபாநாயகர் பதவிக்கு யாரை நிறுத்துவது? அதிமுக எம்.எல்.ஏ பேட்டி

சென்னை, மார்ச் 16—பாண்டிச்சேரி சட்டசபையில் சபாநாயகர், துணை சபாநாயகர் பதவிகளுக்கு யாரை நிறுத்துவது என்பது பற்றி வெளிநாட்டிலிருந்து எம். ஜி. ஆர். திரும்பிய பிறகு முடிவு எடுக்கப்படும்.

இத் தகவலை முத்தியால் பேட்டை தொகுதி அதிமுக எம். எல். ஏ. பழனிராஜா நமது நிருபருக்கு அளித்த பேட்டியில் கூறினார்.

சபாநாயகர், துணை சபாநாயகர் பதவிகளுக்கு யாரை நிறுத்துவது என்பது பற்றி பாண்டிச்சேரி அ. தி. மு. க. தலைவர்கள் முடிவு செய்துவிட்டனரா என்று அவரிடம் கேட்டபோது இதுபற்றி இன்னும் முடிவு எடுக்கப்படவில்லை என்று பதிலளித்தார்.

"சட்டசபைக் கூட்டம் துவங்குவதற்கு முன்னதாக வெளிநாட்டிலிருந்து எம். ஜி. ஆர். திரும்பிவருவார். அவர் வந்தபிறகு இதுபற்றி முடிவு எடுக்கப்படும்" என்றும் அவர் கூறினார்.

புதிய அரசில் நீங்கள் ஏதேனும் பதவி பெறுவீர்களா என்ற கேள்விக்கு அவர் பதிலளிக்கையில் "எனக்குப் பதவி ஆசை எதுவும் இல்லை. என். தொகுதி மக்களுக்காகப் பாடுபடுவேன். அவர்களுடைய பிரச்னைகளைத் தீர்ப்பதில் கவனம் செலுத்துவேன்" என்றார்.



ஏ. சி. திருலோக்சந்தர்



சிவாஜி கணேசன்



ஜெயலலிதா

# சிறந்த நடிகர் சிவாஜி கணேசன் சிறந்த நடிகை ஜெயலலிதா

பம்பாய், மார்ச் 16 — சிறந்த நடிகராக சிவாஜி கணேசனையும், சிறந்த நடிகையாகஜெயலலிதாவையும் "பிலிம் பேர்" பத்திரிகை தேர்ந்தெடுத்திருக்கிறது.

ஆண்டுதோறும் சிறந்த படத்தையும், நடிகர், நடிகையரையும் தேர்ந்தெடுத்து பம்பாயிலிருந்து வெளிவரும் 'பிலிம் பேர்' பத்திரிக்கை பரிசளித்து பாராட்டி வருகிறது.

வழக்கம்போல் சென்ற ஆண்டு வெளிவந்த படங்களில் சிறந்த படத்தையும், சிறந்த நடிகர், [...]கையையும் தேர்வு செய்து பிலிம்பேர் பத்திரிக்கை அறிவித்துள்ளது.

சென்ற ஆண்டு வெளிவந்த படங்களில் சிறந்த படமாக 'பாரத விலாஸ்' படம் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளது. இந்தப் படத்தைத் தயாரித்து டைரக்ட் செய்த ஏ. சி. திருலோக்சந்தர் சிறந்த டைரக்டராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

சிறந்த நடிகருக்கான பரிசு "கௌரவம்" படத்தில்நடித்ததற்காக சிவாஜி கணேசனுக்கும், சிறந்த நடிகைக்கான பரிசு "சூரியகாந்தி" படத்தில் நடித்ததற்காக ஜெயலலிதாவிற்கும் கிடைத்திருக்கிறது.

வருகிற ஏப்ரல் மாதம் 11ம் தேதி பம்பாயில் நடைபெறும் பிரமாண்டமான விழாவில் அனைவருக்கும் 'பிலிம்பேர்' பத்திரிகையின் சார்பில் பரிசு வழங்கப்படும்.

64-ம் நாள் போராட்ட முடிவில்

# டெல்லி பணிந்தது: குஜராத் சட்டசபை கலைக்கப்பட்டது

புதுடெல்லி, மார்ச் 16—குஜராத் சட்டசபையைக் கலைத்து டெல்லி சர்க்கார் நேற்று இரவு உத்தரவு பிறப்பித்தது. 64 நாள் போராட்டத்தில் 87 பேர் சாவுக்குப்பின், டெல்லி அரசு பணிந்தது.

குஜராத் மாநிலத்தில் கடுமையான அரிசி—உணவுப் பஞ்சம் இருந்து வருவதால், கடந்த 64 நாட்களாக மக்கள் போராட்டம் நடத்தி வந்தார்கள்.

சட்டசபையை கலைத்து விட்டு தேர்தல் நடத்தும் வரை, இந்த போராட்டம் நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டது.

## மொரார்ஜி உண்ணாவிரதம்

இந்த கோரிக்கையை வலியுறுத்தி, பழைய உதவி பிரதமரும், ப. காங்கிரஸ தலைவருமான மொரார்ஜி தேசாய் உண்ணாவிரதம் இருந்தார்.

அவர் உண்ணாவிரதம் தொடங்கி 5 நாட்கள் ஆகின்றன.

மொரார்ஜி தேசாய் அண்ணாவிரதம் தொடங்கிய பிறகு போராட்டம் மேலும் தீவிரம் அடைந்தது.

நேற்றும் குஜராத் மாநிலத்தில் பல பகுதிகளில் கிளர்ச்சிகள் நடந்தன. ரெயில்கள் நிறுத்தப்பட்டு தண்டவாளங்கள் பெயர்க்கப்பட்டன. இதனால் நடந்த துப்பாக்கிச் சூட்டில் ஒருவர் செத்தார்.

## 87 பேர் சாவு

குஜராத்தில் போராட்டம் தொடங்கியதில் இருந்து இது வரை, போலீஸ் துப்பாக்கி சூட்டில் 87 பேர் இறந்துள்ளனர்.

நூற்றுக்கணக்கானவர்கள் காயம் அடைந்து ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெறுகிறார்கள்.

## 95 பேர் ராஜினாமா

சட்டசபையை கலைக்கக் கோரி, குஜராத் பழைய முதல் மந்திரி ஓசாவும், மற்றும் 9 இ. காங்கிரஸ் உறுப்பினர்களும் நேற்று ராஜினாமா செய்துள்ளனர்.

இவர்களையும் சேர்த்து, இதுவரை ராஜினாமா செய்த எம். எல். ஏ.க்கள் எண்ணிக்கை 95 ஆகிறது. (மொத்த உறுப்பினர்கள் எண்ணிக்கை 168.)

72 இ. காங்கிரஸ் உறுப்பினர்களும், ஒரு சுயேச்சை உறுப்பினரும் மட்டும் ராஜினாமா செய்யவில்லை.

இதன்பிறகு டெல்லி மந்திரி சபை நேற்று அவசரமாகக் கூடி, குஜராத் நிலவரம் பற்றி ஆலோசித்தது.

குஜராத் சட்டசபையை கலைத்துவிடுவது என்று, கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

அதன்படி சட்டசபை கலைக்கப்பட்டது.

டெல்லியின் அறிவிப்பு வெளியானதும், குஜராத் மக்கள் மகிழ்ச்சியால் ஆனந்த கூத்தாடினார்கள். தெருக்களில் பட்டாசுகளை வெடித்தும், வாண வேடிக்கைகள் நடத்தியும் விழா கொண்டாடினார்கள்.

"சட்டசபைக்கு பொதுத் தேர்தல் எப்போது நடத்தப்படும்?" என்று குஜராத் கவர்னரிடம் நிருபர்கள் கேட்டார்கள்.

"அது பற்றி பிறகு முடிவு செய்யப்படும்" என்று கவர்னர் பதில் அளித்தார்.

போராட்டம் வெற்றி பெற்றதை தொடர்ந்து, மொரார்ஜி தேசாய் இன்று (சனிக்கிழமை) தனது உண்ணாவிரதத்தை ஆரஞ்சுப் பழச்சாறு குடித்து முடித்துக் கொண்டார்.

---

## வானொலியில் போலீஸ் செய்தி அறிக்கை

சென்னை, மார்ச் 16—அனைத்திந்திய வானொலியின் சென்னை நிலையம் இன்று முதல் பொதுமக்கள் அக்கறை கொள்ளும் விஷயங்கள் பற்றி 5 நிமிட போலீஸ் செய்தி அறிக்கை ஒன்றை ஒலிபரப்ப இருக்கிறது. இந்தச் செய்தி அறிக்கையைவாரத்தில்மூன்று நாட்கள் அதாவது சனி திங்கள், வியாழக் கிழமைகளில் மாலை 6-55 மணிக்கு சென்னை— ஏ அலை வரிசைகளில் கேட்கலாம். இன்று 15-ஆம் தேதி மாலை 6-15 மணிக்கு இதே அலை வரிசைகளில் துவக்கச் செய்தியை போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் அருள் வாசித்து அளிப்பார்.

---

## நியூயார்க் பருத்தி மார்க்கெட்

நியூயார்க், மார்ச் 15—

| | |
|---|---|
| ஆரம்ப விலை | 61. 70 |
| முடிவு விலை | 61. 26 |

---

## சென்னை மார்க்கெட்

சென்னை, மார்ச் 16—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 506 00
(22 காரட்) சில்லரை 1 கிராம் ரூ. 48 00
(14 காரட்) சில்லரை 1 கிராம் ரூ. 30 00

**வெள்ளி**

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1295 00
உள்ளூர் வெள்ளி ரூ. 1245 00
(வெள்ளி 10 கிராம்) ரூ. 13 05

**மணிலாப்பயறு**

மாரிகால பட்டாணி 80 கி. கி. ரூ. 305 00

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 780 00
சில்லரை விலை ரூ. 8 20

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 620 00
சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) ரூ. 95 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம். எஸ். மார்க் ரூ. 194 00
முதல் ரூ. 200 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 143 00
விற்பனை வரி தனி
சில்லரை (கிலோ 1-க்கு) ரூ. 9 25

**கடலைப்பிண்ணாக்கு**

கி. கி. கொண்ட மூட்டைக்கு 70 எக்ஸ்பெல்லர் ரூ. 90 00

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் லெவி 100 கி. கி. ரூ. 385 00
முதல் ரூ. 386 00

---

ஊனமுற்றோருக்கு வேலை அளிப்பதில் சாதனை

## தமிழக அரசு இலாகாவுக்கு ஜனாதிபதி பரிசு

சென்னை, மார்ச் 16—உடல் ஊனமுற்றோருக்கு வேலை அளிப்பதில் சாதனை புரிந்துள்ளதற்காக தமிழக அரசின் எழுதுபொருள் அச்சு இலாகாவுக்கு ஜனாதிபதி பரிசு கிடைத்துள்ளது.

இப்பரிசை வருகிற 17-ந் தேதி யன்று நடக்க இருக்கும் விழாவில் ஜனாதிபதி கிரி வழங்குவார்.

இத்தகவல் சட்டசபையில் போக்குவரத்து அமைச்சர் ராமச்சந்திரன் தாக்கல் செய்த ஆய்வறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

உடல் ஊனமுற்றோருக்கு வேலை அளிப்பதில் நிகரற்ற பணிகளைச்செய்துள்ளதற்காக தேசிய பரிசு பெறும் தமிழக அரசு எழுது பொருள் அச்சக இலாகாவில் ஊனமுற்றோர் 57 பேருக்கு வேலை அளிக்கப்பட்டுள்ளது. இவர்களில் பார்வையற்றவர் 7 பேர்; காது கேளாதவர் - 3 பேர்; பேசும் திறன் இழந்தவர் - 6 பேர்; முடவர் - 37 பேர்; பிற உறுப்பு ஊனமடைந்தவர் - 4 பேர்.

---

ராமச்சந்திரன் கேள்வி

# நட்டம் வந்தாலும் கண்டிப்பது; லாபம் வந்தாலும் கண்டிப்பதா?

சென்னை, மார்ச் 16—"அரசு போக்குவரத்துத் துறையில் நட்டம் வந்தாலும் கண்டிப்பது; லாபம் வந்தாலும் கண்டிப்பதா?" என்று எதிர்க் கட்சியினரைப் பார்த்து அமைச்சர் ராமச்சந்திரன் கேட்டார்.

போக்குவரத்து துறை மானியக் கோரிக்கைமீது நேற்று சட்டசபையில் விவாதம் நடந்தது. விவாதத்திற்குப் பதிலளித்து அமைச்சர் ராமச்சந்திரன் பேசியதாவது:—

1967-ல் கழக அரசு ஏற்பட்டபோது போக்குவரத்து துறையால் 15 கோடி வருவாய் வந்தது. இப்போது 35.12 கோடி வருவாய் வருகிறது.

கட்டணம் நிரந்தரமாக இருக்கிறது. வருமான உயர்வு, வரி உயர்வு இருந்தும் பயணிகளுக்குக் கட்டணம் குறைந்து இருக்கிறது.

போக்குவரத்துக் கட்டணத்தை உயர்த்தி இருந்தால் 6 பைசா சரியாக இருந்து இருக்கும். தாங்குகிறவர்களுக்கு வரி விதித்து தாங்க முடியாத ஏழை மக்களுக்கு கட்டணச் சலுகை தந்து இருக்கிறது. இதைவிட அண்ணாவின் கொள்கை அமல் நடத்தப்படவில்லை என்று சொல்ல முடியுமா?

போக்குவரத்து துறையில் நிர்வாக சீர்திருத்தம் செய்ய முடிவு எடுத்துஇருக்கிறோம். தமிழகம் முழுவதும் போக்குவரத்தில் நிர்வாக சீர்திருத்தம் செய்வது அரசின் பரிசீலனையில் இருக்கிறது.

இதன்மூலம் புதிய மாற்றம்—புதிய விழிப்பு உணர்ச்சி உண்டாக்க முடியும் என்று நம்புகிறோம்.

நாட்டுடமை ஆக்குவது பற்றி குறிப்பிட்டார்கள். பஸ்களை மட்டும் ஏன் எடுக்க வேண்டும் என்றார்கள். மக்களுக்கு அன்றாடம் தேவைப்படும் துறை. இதை தனியாரிடம் விட்டு வைப்பது சரியல்ல.

## அண்ணா சொன்னபடி

அண்ணா 59ல் இருந்து பஸ்கள் தேசியமயமாக ஆகவேண்டும் என்று வற்புறுத்தி வந்தார்.

பஸ்கள்முழுமையாக தேசியமயமாக்கவேண்டும் என்பது தான் இந்த அரசின் கொள்கை. 76 வரை தேசியமயமாக்கமாட்டீர்கள் என்று அம்மையார் குறிப்பிட்டார். 10 ஆண்டு ஆகும் என்று ஜேம்ஸ் குறிப்பிட்டார்.

67ல் இருந்து 74 வரை 7 ஆண்டுகளில் அறிவித்த கொள்கைப்படி எல்லா பஸ்களையும் எடுக்கமுடியவில்லை.

293 வழித்தடங்களை எடுக்க நீதிமன்றமூலம் தடைசெய்து வருகிறார்கள். இதனால் வேகமாக செயல்பட முடியவில்லை. இன்னும் 10, 15 ஆண்டுகள் கூட இதற்காகஆகலாமென்று தோன்றுகிறது.

சில வழக்குகள் உச்ச நீதி மன்றத்தில் உறங்கிக்கொண்டிருக்கிறதென்றால்கூட மிகையாகாது. இந்த நிலை நீடித்தால் எப்படி தேசியமயமாக ஆக்கமுடியும்.

50 பஸ்களுக்குமேல் உள்ள நிறுவனங்கள் அனைத்தும் தேசியமயமாக்கப்படும் என்ற திட்டம் முழுமையாக செயல்படுத்தப்பட்டு இருக்கிறது.

1967-ல் 20 சதவிகித பஸ்கள்தான் அரசு வசம் இருந்தது இப்போது 1373-ல் இருந்து 3902 ஆக ஆகி இருக்கிறது.

தனியார்வசம் அன்று 5451 பஸ்கள் இருந்தன. இன்று 5550 தான் இருக்கிறது.

அரசு பஸ்கள் மூலம் தினமும் 32 லட்சம் மக்கள் பயணம் செய்கிறார்கள். அவர்களுக்குத் திருப்தி இல்லாவிட்டால் போக்கு வரத்து துறையைச் சும்மாவிட்டு இருப்பார்களா?

சென்னை நகரைப் பார்த்து மற்ற இடங்களைக் கணக்கிடக் கூடாது. நட்டம் வந்தாலும் கண்டிப்பது; லாபம் வந்தாலும் கண்டிப்பது என்பது சரியல்ல.

நட்டத்திற்கான காரணங்களை ஆராய்ந்ததால்தான் லாபம் வந்திருக்கிறது. போக்குவரத்துக் கழகங்கள் நல்ல முறையில் நடக்கின்றன.

சென்னை நகரில் 18 லட்சம் டிக்கெட்டுகள் விநியோகிக்கப் படுகின்றன. நம்பரை அச்சடிப்பதில் ஏற்படும் தவறால் நம்பர் தவறு ஏற்பட்டுவிடுகிறது. போலி டிக்கெட்டை யாரோ அடித்து வருமானம் பாதிக்கப்படுகிறது என்பது சரியல்ல.

தனியார் அச்சகத்தில் டிக்கெட் அடிப்பதைக் குறைத்து அரசு அச்சகத்தில் அடிக்க நடவடிக்கை எடுத்து வருகிறோம்.

வருமானம் குறையவில்லை. ஆகவே இதுபற்றி அஞ்சத் தேவை இல்லை.

சென்னை நகரில் போக்குவரத்தை சீரமைக்க நிபுணர் அய்யாசாமியின் சிபாரிசை ஒரு இடத்திரு அமல் செய்து இருக்கிறோம்.

மேலும் இரு இடங்களில் அமல்படுத்த இருக்கிறோம். நகரில் நெரிசலைக் குறைக்க "மாபெரும் போக்குவரத்து முறை" ஒன்றைக்கொண்டுவர விரும்புகிறோம். இதற்கு மத்திய அரசு இன்னும் அனுமதி தரவில்லை.



தற்காலிக பரிகாரம்ரெயில் வேயை இன்னும் கொஞ்சம் மின்சாரமயமாக்குவது ஆகும்.

கட்டண உயர்வுபற்றி அரசு ஆராய்ந்துவருகிறது. இன்னமும் முடிவு எடுக்க வில்லை என்றார்.

அமைச்சரின் பதிலுக்குப் பிறகு மானியக்கோரிக்கைகள் நிறைவேறின. வெட்டுத் தீர்மானங்கள் வாபஸ் பெறப்பட்டன.

---

படப்பிடிப்புக்கு வராததால்

# பட அதிபருக்கு நடிகை லதா ரூ. 6 ஆயிரம் நஷ்டஈடு கொடுக்கிறார்

சேலம், மார்ச் 16—ஒப்பந்தப்படி படப்பிடிப்பில் கலந்துகொள்ளாததால் நடிகை லதா மீது கீதா சித்ரா பட அதிபர் தொடர்ந்த வழக்கில் சமரசம் ஏற்பட்டுள்ளது. நடிகை லதா நஷ்டஈடாக பட அதிபருக்கு ரூ. 6 ஆயிரம் கொடுக்கிறார்.

கீதா சித்ரா புரொடக்சன்ஸ் என்னும் படக்கம்பெனி தயாரித்து வெளியிட்ட படம் "கல்யாணமாம் கல்யாணம்" இதில் ஜெய்சங்கர் — ஜெயசித்ரா ஜோடியாக நடித்துள்ளனர்.

இந்த படத்தில் நடிக்க நடிகை லதாவும் ஒப்பந்தம் செய்யப்பட்டு இருந்தார்.

இந்தப் படத்தில் நடித்து முடிக்க லதாவுக்கு ரூ. 15 ஆயிரம் கொடுத்துவிடுவது என்றும். குறிப்பிட்ட தேதிகளில் லதா ஒழுங்காக "கால்ஷீட்" கொடுத்து படப்பிடிப்பில் கலந்துகொள்ள வேண்டும் என்றும் ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்டு இருந்தது.

ஒப்பந்தத்தில் லதா கையெழுத்துப்போட்டு, முன் பணமாக ரூ. 1000ம் வாங்கிக் கொண்டார்.

## ஒப்பந்தத்துக்கு மாறாக....

"கல்யாணமாம் கல்யாணம்" படத்திற்கு கடந்த 23—9—73ல் சேலம்மாடர்ன் தியேட்டர்சில் படப்பிடிப்பு நடத்த ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. அது லதா சம்பந்தப்பட்ட படப்பிடிப்பாகும். ஆனால் ஒப்பந்தத்தில் குறிப்பிட்டதற்கு மாறாக, அவர் படப்பிடிப்புக்கு வரவில்லை.

படப்பிடிப்பில் கலந்து கொள்ள வரும்படி சேலத்திலிருந்து லதாவுக்கு தந்தியும் அடிக்கப்பட்டது. அப்படி இருந்தும் அவர் படப்பிடிப்பில் கலந்துகொள்ளவில்லை.

## பட அதிபர்வழக்கு

இதை தொடர்ந்து, நடிகை லதா மீது சேலம் அடிஷனல் உதவி நீதிபதி கோர்ட்டில் வழக்கு தொடரப்பட்டது. "கல்யாணமாம் கல்யாணம்" படத்தை தயாரித்தவர்களில் ஒருவரான கே. பாலகிருஷ்ணன் இந்த வழக்கைத் தொடர்ந்தார்.

குறிப்பிட்ட தேதியில் படப்பிடிப்பிற்கான ஸ்டூடியோ வாடகை நடிகர்—நடிகைகளின் போக்குவரத்து செலவு தங்கும் இடம் ஆகியவற்றுக்காக ரூ. 38,950 செலவு ஆகியது. லதா படப்பிடிப்புக்கு வராததால், அந்தப் பணம் முழுவதும் நஷ்டமாகி விட்டது. இதனால் நஷ்டமடைந்த பணத்தை, லதா கொடுக்க கோர்ட்டு உத்தரவிட வேண்டும்" என்று வழக்கில் கூறப்பட்டு இருந்தது.

இந்த வழக்கை நீதிபதி விசாரணைக்கு ஏற்றுக் கொண்டார்.

லதாவின் வக்கீல் கேட்டுக் கொண்டதன் பேரில் வழக்கு விசாரணை 18-ம் தேதிக்குத் தள்ளிவைக்கப்பட்டது.

## சமரசம் ஏற்பட்டது

இதற்கிடையில் "கல்யாணமாம் கல்யாணம்" பட அதிபருடன் நடிகை லதா பேசி, சமரசம் செய்து கொண்டார்.

இதைத் தொடர்ந்து, பட அதிபரின் சார்பில் வக்கீல் ராஜகோபால் கோர்ட்டில் நேற்று ஒரு மனு தாக்கல் செய்து இருக்கிறார். அதில் கூறி இருப்பதாவது:—

இந்தவழக்கில் நடிகை லதா என் கட்சிக்காரருக்கு (பாலகிருஷ்ணன்) 6,030 ரூபாய் தர சம்மதித்து சமரசமாக போய்விட்டார். இதில் 3,000 ரூபாய் லதா கொடுத்துவிட்டார்.

மீதி பணத்தை வழக்கு தள்ளுபடி ஆனதும், கொடுக்க ஒப்புக்கொண்டு இருக்கிறார். எனவே இந்த வழக்கை தள்ளுபடி செய்யும்படி கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு மனுவில் கூறப்பட்டு உள்ளது.

---

7-ம் பத்தித் தொடர்ச்சி

களில் கேரள மாநிலத்தைச் சேர்ந்தவர்கள் அதிகம் இருந்தனர் என்பதும், கள்ளநோட்டுகளை அச்சிடும் அச்சகங்கள் கேரளத்தில் இருந்தன என்பதும் தெரியவந்துள்ளது.

வகாப் (முஸலிம் லீக்): கண்ணியமானவர்களும் ரூபாய் இரட்டிப்பு மோசடியில் சிக்கி ஏமாற்றப்படுகிறார்கள். அவர்கள் போலீசாரிடம் புகார் செய்யத் தயங்குகிறார்கள், அப்படி அவர்கள் புகார் செய்தால், அவர்களுடைய பெயரை ரகசியமாக வைத்திருக்க ஏற்பாடு செய்யப்படுமா?

இநலமைச்சர்:—10ஆயிரம் ரூபாயை 20 ஆயிரம் ரூபாயாக ஆக்கவேண்டும் என்று விரும்புகிறவர்கள், கண்ணியமானவர்கள் பட்டியலில் வரமாட்டார்கள்.

---

மதுரையில் வீர விளையாட்டு

# ஜல்லிக்கட்டு காளை குத்தி ஒருவர் மரணம்: 12 பேர் படுகாயம்

மதுரை, மார்ச் 16—உறங்கான்பட்டி கிராமத்தில் நடந்த ஜல்லிக்கட்டில் காளை குத்தியதால் ஒருவர் மரணமடைந்தார்; 12 பேர் படுகாயமடைந்தனர்.

மதுரை மாவட்டம் உறங்கான் பட்டி கிராமத்தில் ஜல்லிக்கட்டு நடந்தது.

இந்த வீர விளையாட்டில் கலந்துகொண்டு காளையைப் பிடிக்க பாய்ந்து சென்ற சின்னக் கருப்பன் என்ற வாலிபர் மரணமடைந்தார். காளை ஒன்று அவரைக்குத்தியதால் படுகாயமடைந்து அவர் மாண்டார்.

மற்றும் காளைகளைப் பிடிக்கச்சென்ற 12 பேர் படுகாயமடைந்தனர். இவர்களில் 10 பேர் உடனடியாக வெள்ளூர் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டனர்.

2 பேர் மதுரை மருத்துவமனையில் சேர்க்கப்பட்டனர்.

இந்த ஜல்லிக்கட்டு விழாவைப் பார்க்க மதுரை மாவட்ட தி. மு. க. பொறுப்பாளர் பொன். முத்துராமலிங்கம் வந்திருந்தார். அவருக்கு கிராமத்தினர் சார்பில் சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது.

---

## சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

நக்கீரர் கழகம் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி கா. நமச்சிவாயர் நினைவு சொற்பொழிவுத் தொடரில் அகப்பொருள்—புறப்பொருள் பற்றி புலவர் பூ. பரசுராமன் சொற்பொழிவு. மாநிலக் கல்லூரி, மாலை 6 மணி.

ஜனசங்க தொழிலாளர் மாநாடு: தலைமை வி. ராமகிருஷ்ணன், துவக்கி வைப்பவர், ஜகன்னாத ராவ் ஜோஷி, கலந்து கொள்வோர்: எஸ். ஏ. பழனிசாமி, கே. கிருஷ்ணமூர்த்தி மீனாட்சி கல்யாண மண்டபம், புரசைவாக்கம் நெடுஞ்சாலை காலை 9-30 மணி.

இ. காங்கிரஸ் பொதுக் கூட்டம். தலைமை: மயிலை மைக்கேல். பேசுவோர்: வி. ராமையா, டி. என். அனந்த நாயகி, செங்கல்வராயன். மாங்கொல்லை, மயிலை. 6-30 மணி.

---

சட்டசபையில் தகவல்:

# கள்ள நோட்டு அச்சடிப்பதில் கேரளத்தவர் தீவிரம்

சென்னை, மார்ச் 16—"கள்ள நோட்டு அச்சடிப்பதில் கேரள மாநிலத்தைச் சேர்ந்தவர்கள்தான் அதிகமாக உள்ளனர்" என்ற தகவல், இன்று தமிழக சட்டசபையில் வெளியிடப்பட்டது.

இன்று சட்டசபையில் கேள்வி நேரத்தின்போது உறுப்பினர் ஒருவர் கேட்ட கேள்விக்கு முதல்வர் கருணாநிதி மேற்கண்ட தகவலை வெளியிட்டார்,

ரூபாய் நோட்டு இரட்டிப்பு மோசடி சம்பந்தமாகசென்னை நகரில் 2 போலீஸ்காரர்கள் கைது செய்யப்பட்டுள்ளதாகவும், முதலமைச்சர் கருணாநிதி இன்று சட்டசபையில் கேள்வி நேரத்தின்போது கூறினார்.

கருணாநிதிமேலும் சொன்னதாவது:—

கடைக்காரர் ஒருவரிடம் யாரோ ஒருவர், ஐந்து ரூபாய் நோட்டுகளை இருட்டிப்பாக ஆக்கித் தருவதாக கூறினார். ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு வருமாறு கடைக்காரர் அழைக்கப்பட்டார். அங்கு கடைக்காரர் பணத்தோடு போனபோது 2 போலீஸ்காரர்கள் வந்து மிரட்டியிருக்கிறார்கள்.

ரூபாய்நோட்டுகளை இரட்டிப்பாக ஆக்கித்தருவதாக கூறிய நபர் உடனே ஓடிவிட்டார்.

போலீஸ்காரர்கள் மீது கடைக்காரர் புகார் கொடுத்தார். அதன்பேரில் அந்த 2 போலீஸ்காரர்களும் கைது செய்யப்பட்டனர். ஒருவர் ஒரு விபத்தில் இறந்தார். மற்றொரு போலீஸ்காரர் பதவி நீக்கம் செய்யப்பட்டார்.

## போலீஸ் நன்னடத்தை

டென்னிஸ்:— இனிமேல் போலீஸ் துறைக்கு ஆட்களை எடுக்கும்போது அவர்களுடைய நன்னடத்தை பற்றி விசாரிக்கப்படுமா? அவர்களுக்கு ஒழுக்க போதனை வழங்க வசதி செய்யப்படுமா?

முதலமைச்சர்;— எல்லோரும் மனிதர்களே. ஒருவர் என்ன செய்வார் என்பது முன்னதகவே தெரிந்து கொள்வது இல்லாத காரியம். வேலையில் சேர்ந்த பிறகு மாறி விடுகிறார்கள். அவர்களுக்குத் தான் தயவு காட்டாமல் நடவடிக்கை எடுக்கப்படுகிறது.

பாலசுந்தரம்:— இப்படிப் பட்ட மோசடிகளைத் தடுக்க பறக்கும் போலீஸ் படை ஏற்படுத்தப்படுமா?

முதலமைச்சர்:—ஏற்கனவே பல நடவடிக்கைகள் எடுக்கப் பட்டுள்ளன.

தங்கமணி (கம்யூ):—கள்ள நோட்டு அச்சடிப்பது, நோட்டுகளை இரட்டிப்பாக ஆக்கித் தருவதாக கூறிமோசடி செய்வது ஆகியவைகளைத் தடுக்க என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டுள்ளது?

முதலமைச்சர்: தீவிர நடவடிக்கைகள் எடுக்கப் டுள்ளன. கள்ள நோட்டு அச்சடிப்பு ஓரளவு குறைந்து விட்டது என்று கூறலாம்.

காமாட்சி (தி மு க):—போலீஸ்காரர்கள் போல உடை அணிந்து இவ்வித மோசடியில் ஈடுபடுகிறார்கள். ஆகவே அதிகாரம் இன்றி போலீஸ் உடை அணிபவர்களுக்கு கடும் தண்டனை தர செயற்குறிப்பு ஏதேனும் உண்டா?

முதலமைச்சர்:—ஏற்கனவே இதைத் தடுக்க சட்டம் உள்ளது. இந்த மோசடியில் ஈடுபட்டவர்கள் போலீஸ்காரர்களைப் போல உடை அணிந்தவர்கள் அல்ல. போலீஸ்காரர்களே ஈடுபட்டிருக்கிறார்கள்.

தேவேந்திரன் (தி.மு.க.):—கள்ள நோட்டு அச்சடிப்பதில் கேரளத்தைச் சேர்ந்தவர்கள் அதிகம் ஈடுபட்டுள்ளதாக சொல்லப்படுவது உண்மையா?

## கேரளா

முதலமைச்சர்:— கண்டு பிடிக்கப்பட்ட சில வழக்கு

3-ம் பத்தி பார்க்க

# அரசு பஸ்களின் நெரிசலில் பெண்கள்: ஹாண்டே கவலை

**சென்னை, மார்ச் 16— அரசாங்க பஸ்களில் நெரிசலில் சிக்கிப் பெண்கள் கஷ்டப்படுவதாக, அ. தி. மு.க. எம்.எல்.ஏ. ஹாண்டே கவலையுடன் குறிப்பிட்டார்.**

சட்டசபையில் போக்குவரத்துத்துறை மானியக் கோரிக்கை மீது நடந்த விவாதத்தில் கலந்துகொண்டு பேசும்போது ஹாண்டே கூறியதாவது:—

போக்குவரத்து இலாகாவை செம்மையாக்க எடுத்த முயற்சியை பாராட்டுகிறேன். லாபம் என்று அறிவித்தார். வரியைக் கழித்துப் பார்த்தால் லாபம் குறைவாக இருக்கும்.

பஸ்களில் நெரிசல் அதிகமாக இருக்கிறது. பெண்கள் கஷ்டப்படுகிறார்கள். போக்குவரத்து முழுவதையும் நவீனப்படுத்தவேண்டும். இதற்கு ஏதாவது ஒரு திட்டம் உண்டா?

பாதாள ரெயில், ரிங் ரோடுகள் முதலிய திட்டங்கள் பற்றி என்ன ஆயிற்று?

போக்குவரத்து துறையில் இதுவரை ஏற்பட்ட நட்டத்திற்குக் காரணம் என்ன? இது ஆராயப்பட்டத...

வண்டிகள் பயன் படுத்தப்படுவது குறைந்துஇருக்கிறது. இந்த இலாகா திறமையாக செயல்படவில்லை.

## 96 தொழிலாளர் பிரச்னை

தொழிலாளர்களின் குறைபாடுகள் தீர்க்கப்படவில்லை. தண்டையார்பேட்டை டெப்போவைச் சேர்ந்த 98 தொழிலாளர்கள் இன்னமும் திரும்ப எடுத்துக்கொள்ளப்படவில்லை. பழிவாங்கப்பட்ட அந்த 98 தொழிலாளர்களையும் சஸ்பெண்டை ரத்துசெய்து திரும்ப வேலைக்கு எடுக்க வேண்டும்.

தஞ்சையில் மூடப்பட்ட எஸ். எம். டி. தொழிலாளர்கள் அனைவரும் அரசாங்கப் போக்குவரத்து துறையில் எடுத்துக்கொள்ளப் படுவார்கள் என்று உறுதிமொழி தந்தும் எல்லோரையும் எடுத்துக் கொள்ளவில்லை.

இவ்வாறு ஹாண்டே பேசினார்.

# மருத்துவ மனையில் கிருஷ்ண மேனன்

லண்டன், மார்ச் 16— இருதய நோயினால் பாதிக்கப்பட்டுள்ள இந்தியாவின் முன்னாள் மந்திரி வி.கே. கிருஷ்ண மேனன், லண்டன் ஆஸ்பத்திரி ஒன்றில் நேற்று சிகிச்சைக்கு சேர்க்கப்பட்டார்,

அவர்கட...8-ந் தேதிவெள்ளிக்கிழமையன்றுலண்டனுக்கு வந்து சேர்ந்தார். மறு நாளே அவருக்கு உடல் நலக் குறைவு ஏற்பட்டது.

காங்கிரஸ் எம். எல். ஏ. புகார்

# "அரசு பஸ்களில் ஒரே நம்பர் உள்ள பல டிக்கெட்டுகள்"

சென்னை, மார்ச், 16— அரசு பஸ்களில் ஒரே நம்பருள்ள பல டிக்கெட்டுகள் காணப்படுவதாக பழைய காங்கிரஸ் எம். எல். ஏ. ஜேம்ஸ் கூறினார்.

''இது எங்கே போய் முடியுமோ?'' என்றும் அவர்வருத்தப்பட்டார்.

போக்குவரத்துத் துறை மான்யக் கோரிக்கை மீதான விவாதத்தில் கலந்துகொண்டு, நேற்று சட்டசபையில் பேசும்போது அவர் கூறியதாவது:

ஜேம்ஸ் (ப. காங்): இதுவரை நட்டத்தில் ஓடிய இலாகா லாபத்தில் ஓடுகிறது என்ற நற்செய்தியை அறிவித்தார். ஒன்றைச் சொல்லாமல் விட்டுவிட்டார்.

2 ஆண்டுகளுக்கு முன்பு இன்னும் 5 ஆண்டில் எல்லா பஸ்களும் நாட்டுடமை ஆக்கப்படும் என்றார். இதுவரை 4 ஆயிரம் பஸகள்தான் நாட்டுடமை ஆக்கப்பட்டு இருக்கிறது. எஞ்சிய பஸ்கள் நிலை என்ன ஆயிற்று.

உச்ச நீதிமன்றத்தால் சுப்ரீம் கோர்ட் தனியார் பஸ்களை நாட்டுடமை ஆக்குவதில் சங்கடம் இருந்தால் பஸ்கள் போகாத ஊர்களுக்கு ஏன் பஸ்களை விடவில்லை.

இன்னும் 10 ஆண்டுகள் போனாலும் எல்லா பஸ்களையும் நாட்டுடமை ஆக்கமாட்டீர்கள்.

இந்த இலாகா ஊழியர்களுக்குத் தரப்படும் சம்பளம் போதுமா. என்று பார்க்க வேண்டும் கேரள மாநிலத்தில் தரப்படும் ஊதியம் இங்கே தரப்பட வேண்டாமா?

தொழிலாளிகளைப் பிழிந்து இந்த லாபம் தேவையா? அரசின் திறமையால் இந்த லாபம் வரவில்லை.

தனியார் துறையில் இருந்த வசதி நாட்டுடமை ஆக்கப்பட்டவைகளில் இருக்கிறது என்று மக்கள் திருப்தி அடைகிறார்களா?

## பஸ்ஸா ? லாரியா ?

பஸ்களில் பயணம் செய்பவர்கள் மனிதர்களா? அல்லது சாக்குமூட்டைகளை அடுக்கும் லாரிகளா? என்று சந்தேகப்படும் வகையில் இருக்கிறது. மூச்சுவிடக்கூடத் திணறுகிறார்கள்.

ஆகவே அடைந்திருக்கும் லாபத்தை நிச்சயம்வரவேற்க முடியாது.

சேரன் போக்கு வரத்துக் கழகம்பற்றி சொன்னார்கள். அதில் உள்ள 122 பஸ்களில் 60 பஸ்கள் ஓடாமல் இருப்பது தெரியுமா?

கட்டபொம்மன் போக்குவரத்துக்கழகத்தில் நூறு பஸ்கள் ஓடாமல் இருக்கின்றன. ஆகவே எந்த அளவு இந்தக் கார்ப்பரேஷன்களைப் பாராட்ட முடியும்?

ஒரே நம்பருள்ள டிக்கெட்டுகள் கொடுக்கப்படுகின்றன. இது எங்கே போய் முடியும்?

67-க்கு முன்பு துரித பஸ்கள் சரியானநேரத்தில் ஓடின. இப்போது திருவிழா போல இருக்கிறது. பஸ ஷெட்யூல் பின்பற்றப்படுவதில்லை.

இவ்வாறு ஜேம்ஸ் பேசினார்.

## திருமணம்

சென்னை, மார்ச் 16— 'குண்டூசி' சினிமா மாத இதழின் ஆசிரியர் கோபாலின் மகள் சந்திராவுக்கும் பி. சீனிவாசனுக்கும் திருவல்லிக்கேணியில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. நகரப் பிரமுகர்களும், நண்பர்களும், பத்திரிகையாளர்களும் திரளாக வந்து மணமக்களை வாழ்த்தினர்.

"5 00 பஸ்களும் தேசியமயம்"

# லாரிகள் தேசியமயம்: தங்கமணி கோரிக்கை

**சென்னை, மார்ச் 16—''பஸ்களைத் தேசியமயம் ஆக்கியதுபோல் லாரிகளையும் தேசியமயம் ஆக்க வேண்டும்'' என்று வ. கம்யூ. தலைவர் கே. டி. கே. தங்கமணி கூறினார். மீதம் உள்ள 5500 பஸ்களையும் தேசியமயம் ஆக்கவேண்டும் என்றார் அவர்.**

போக்கு வரத்து துறை மானியக் கோரிக்கையின் மீது நேற்று தமிழக சட்டசபையில் விவாதம் நடந்தது. அதில் கலந்துகொண்டு தங்கமணி பேசியதாவது:—

அரசு அச்சுத்துறை தொழிலாளர்களின் சம்பள விகிதங்களை மாற்றி அமைக்க வேண்டும்.

தனித்தனியாக கார்ப்பரேஷன் அமைத்ததால்தான் லாபம் என்று சொல்கிறார்கள். சேரன் கார்ப்பரேஷனில் 45 லட்சம் லாபம் வந்திருக்கிறது. இதே போல வருடா வருடம் அந்த முதலாளி லாபம் சம்பாதித்து இருப்பார் அல்லவா?

பஸகளை எடுத்தபோது தந்த நட்டஈடு முறையாக இல்லை. டி. வி. எஸசுக்குத் தரப்பட்ட அளவுதான். ஏ. பி. டி.க்குத் தரப்பட்டதா? நான் டி. வி. எஸசுக்கு ஆதரவாக அதைக் கேட்கவில்லை.

## 5500 பஸ்கள்

மீதம் உள்ள 5500 பஸ்களையும் நாட்டுடமை ஆக்கவேண்டும். எல்லாவற்றையும் ஒரு கார்ப்பரேஷனாக ஆக்கி பிராந்திய பிரிவுகளை அமைத்து அதன் அதிகாரிக்கு முழு அதிகாரமும் தரலாம்.

76 வரை தேசிய மயமாக்க மாட்டார்கள் என்ற அச்சம் இருப்பதால் இந்த ஆண்டே இவைகளை செயல்படுத்த வேண்டும். பிரயாணிகளுக்கு உதவி செய்யவேண்டும்.

டி. வி. எஸ்ஸை விட அதிகம் சம்பாதித்த ஒருவர் மதுரையில் பஸ் விட்டுக் கொண்டிருக்கிறார். தொழிலாளிகளுக்கு கொடுக்கவேண்டியவைகளை சட்டப்படி தருவதில்லை. கேட்டால் கட்டி வைத்து உதைப்பேன் என்று தனி ராஜ்யம் நடத்துகிறார்.

மதுரைக்கே இது அவமானகரமாக இருக்கிறது. ஏக போக முதலாளித்துவத்தை உடைக்கவேண்டும் என்ற நோக்கத்தில் இ... முதலாளியை வளரவ்ட லாமா?

லாரிகளையும் தேசியமயமாக்கவேண்டும். இவ்வாறு தங்கமணி பேசினார்.

அரசு பஸ்களால் நன்மையா? தீமையா?

நாட்டுடைமையால் லாபமா? நட்டமா?

# சர்வ கட்சியினர் கருத்து: 9 எம். எல். ஏ.க்கள் பேச்சு

**சென்னை, மார்ச் 16—அரசு பஸ்களினால் மக்களுக்கு நன்மையா? தீமையா? என்பது பற்றியும், நாட்டுடைமை திட்டத்தால் அரசுக்கு லாபமா? நட்டமா என்பது பற்றியும் பல கட்சிகளைச் சேர்ந்த 9 எம். எல். ஏக்கள் தங்களின் கருத்தைத் தெரிவித்துள்ளனர்.**

சட்டசபையில் போக்குவரத்துறை மானியக் கோரிக்கை மீது நடைபெற்ற விவாதத்தில் கலந்துகொண்டு பேசிய உறுப்பினர்களும், அவர்களின் பேச்சும் வருமாறு:—

## "முதலாளிகள் உரிமையை விடத் தயார்"

செல்வராஜ் (தி. மு. க:): நம் மாநிலத்தில் 10 ஆயிரம் பேருந்துகள் ஓடுகின்றன. இதில் 4,500 பஸ்கள் அரசு பஸ்களாக ஓடுகின்றன.

பேருந்து உரிமையாளர்கள் சமரசத்திற்கு வரத் தயாராக இருக்கிறார்கள். உரிமையை விட்டுத்தர தயாராக இருக்கிறார்கள்.

அவர்களுடன்பேசிஇதுபற்றிய பிரச்னையை தீர்க்க வேண்டும்.

வெற்றிகரமான நிலையை உருவாக்கிய அமைச்சரைப் பாராட்டுகிறேன்.

இவ்வாறு செல்வராஜ் பேசினார்.

## மக்களுக்கு போதுமான பஸ் விடவேண்டும்

லத்தீப் (மு.லீக்):—''தனிப்பட்ட முதலாளிகள் பஸ் போக்குவரத்தை நடத்த முடியாத நிலை உருவாகியிருக்கிறது. மக்களுக்குப் போதுமான பஸ்களை விட அரசாங்கம் தவறிவிட்டது'' என்றார் லத்தீப்.

## கூட்டுறவு மூலம் டயர் விற்பனை

பி. கேசவலு (தி.மு.க.):— ஆளும் கட்சி மீது குறை கூறவேண்டும் என்பதற்காகவே, போக்கு வரத்து துறை மீது குறை கூறப்படுகிறது.

பஸ் உறுப்புக்கள் நியாயமான விலைக்கு வாங்க முடிவதில்லை. இதை மாற்ற, மாவட்டந்தோறும் கூட்டுறவு கடைகள் ஏற்படுத்தி. டயர் மற்ற உறுப்புகள் நியாய விலையில் கிடைக் அரசு ஏற்பாடு செய்ய வேண்டும்.

1965-ல் வாங்கியதைவிட வண்டிகள் விலை இரண்டுமடங்குக்கு உயர்ந்துவிட்டிருக்கிறது. வரியும் உயர்ந்து விட்டிருக்கிறது என்றார் கேசவலு.

## சரியான நேரத்தில் வராத பஸ்கள்

குருசாமி (சுதந்திரா):— பஸ்கள் தேசிய மயமாக்கப்படுவதுடன் நல்ல முறையிலும் நடத்தப்பட வேண்டும். பல்லவன் போக்குவரத்தின் கலக்ஷன் பேட்டா தருவது போல் மற்ற இடங்களிலும் தரப்பட்டால், மக்களுக்கு தொல்லை இல்லாமல் இருக்கும்.

பஸ்கள் சரியான நேரத்தில் வராதது குறித்து புகார் கூறினால் உடனடிநடவடிக்கை எடுக்கவேண்டும்.

தனியார்நடத்திவந்ததடங்களில் பஸ்கள் திடீர் என்று நிறுத்தப் பட்டிருக்கின்றன. இங்கெல்லாம் அரசு. பஸ்களை விடவேண்டும்

நகர பஸ்களின்தூர அளவை 40 கிலோ மீட்டர் என்று மாற்றவேண்டும் என்றார் குருசாமி.

## உபரி உறுப்பு தொழிற்சாலை தேசியமயம் ஆகவேண்டும்

ஆறுமுகம் (தி.மு.க.):— மத்திய அரசு விதித்துள்ள வரி, போக்குவரத்துத் துறையை மிகவும் பாதித்து விட்டிருக்கிறது.

வெளி மார்க்கெட்டில்அதிக விலைக்கு விற்கப்படும் டயர்கள் போன்றவற்றை கட்டுப்படுத்தும் அதிகாரம் நம்மிடம் இல்லை.

உபரி உறுப்புகளை தயாரிக்கும் தொழிற்சாலைகளை எல்லாம் தேசியமயமாக்கவேண்டும்.

பஸ் தொழில் நிரந்தரமாக செயல்படும் ஒரு தொழிலாகும். ஆகையால் இந்தத் தொழிற்சாலைகளை எல்லாம் நாட்டுடைமையாக்குவதில் தயக்கம்காட்டக் கூடாது. பஸ்களை தேசிய மயமாக்கும் வரையில் அவைகளைக் காப்பாற்ற முன்வர வேண்டும். என்றார் ஆறுமுகம்.

## மத்திய அரசை எதிர்த்து போராட...

சுருளிவேல் (தி. மு. க.):— சோஷலிஸ்டு சமுதாயத்தை அமைப்பதில் முன் மாதிரியாக, போக்குவரத்து துறை இருந்து வருகிறது.

நமது உரிமைகளை பெற நாம் மத்திய அரசை எதிர்த்துப் போராடுவோம்என்பதையும் தெரிவித்துக்கொள்கிறோம். பூம்புகார் கப்பல் போக்குவரத்துக் கழகம் அமைக்கப்பட்டிருப்பது ஒரு நல்ல நடவடிக்கையாகும். சோஷலிசமுன்னேற்றத்திற்கு இது நல்ல முயற்சியாகும்.

மாலுமிகளாக வேலைக்குச்சேர வேண்டுமானால், பம்பாய்க்கோ, கல்கத்தாவுக்கோ செல்ல வேண்டியநிலை இருந்து வருகிறது. பூம்புகார் கப்பல் போக்குவரத்து துறைமுகத்தில் எங்கள் சங்கத்தை சேர்ந்தவர்களையே வேலைக்கு எடுக்க முன்வரவேண்டும் என்றார் சுருளிவேல்.

## அரசியல் ஆதிக்கம்

கந்தசாமி (பார்வர்டு பிளாக்): போக்குவரத்து நிறுவனங்களில் ஏற்படும் குறைபாடுகளால் போக்குவரத்து துறையையே குறை கூறக்கூடிய நிலை இருந்து வருகிறது.

மதுரையில் டி. வி, எஸ். நிறுவனம் போக்குவரத்து நடத்திகொண்டிருந்த போது மிகவும் சுத்தமாக இருந்துவந்தது. ஆனால் இப்போது அப்படியில்லை.

தொழிலாளர்களிடையே அரசியல் கட்சிகளின் ஆதிக்கம் இருந்துவருவதால், தொழிலாளர்களைத் தட்டிக் கேட்க முடிவதில்லை. அரசியல் கட்சி சார்பற்ற சங்கங்கள் இருந்தால் தொழிலாளர்களுக்கும் நல்லது; பொது மக்களுக்கும் நல்லது ஆகும் என்றார் கந்தசாமி.

கோதண்டராமையா (சுயே);— பஸ்களில் ஓவர்லோடைத் தவிர்க்க அதிக பஸ்களை விட வேண்டும்.

ஏ. ஆர். சுப்பையா முதலியார் (தி. மு. க):—பஸகளில் ஓவர்லோடு ஏற்றுவது தடுக்கப்படவேண்டும்.

# அரைகுறைதேசியமயம்: அனந்தநாயகி தாக்கு

சென்னை, மார்ச் 16—''பஸ்களை அரைகுறையாக தேசிய மயமாக்கி அரைகுறையாகச் சாகடிக்கிறீர்கள்'' என்று புது காங்கிரஸ் உறுப்பினர் அனந்த நாயகி கூறினார்.

போக்குவரத்துத் துறை மானியக் கோரிக்கை மீதான விவாதத்தின்போது அவர் பேசியதாவது:—

''இந்த ஆண்...தான் லாபம் ஏற்பட்டதாக கூறப்பட்டது. 4 ஆயிரம் பஸ் வண்டிகளை ஓட்டி ''ஓவர் லோடு'' ஏற்றிக்கொண்டு 90 லட்சம் ரூபாய்தான், போக்குவரத்து இலாகாவுக்கு லாபம் ஏற்பட்டுள்ள...

வரி போனால் 45 லட்சம் ரூபாய்தான் கிடைக்கும். இத்தனை பஸ் வண்டிகளை தனியார் நடத்தினால் 30 கோடி ரூபாய் லாபம் கிடைத்திருக்கும், இதில் உங்கள் திறமை என்ன இருக்கிறது? எங்கு இருக்கிறது? மொத்தம் உள்ள 10 ஆயிரம் பஸ்களில் இன்னும் 5 ஆயிரம் பஸ்களை நாட்டுடமை ஆக்கவில்லை. 1976 வரை ஆக்கமாட்டீர்கள் என்றும் எனக்குத் தெரியும்.

''நாங்கள்தான் சமதர்மப் புலிகள்'' என்று சொல்லிக்கொண்டு என்ன செய்திருக்கிறீர்கள்?

சட்டசபைக்கு சரியான தகவல் தரப்படுவது இல்லை. பட்ஜெட் மதிப்பீட்டில் தவறான தகவல் தரப்பட்டுள்ளது.

பக்கத்து மாநிலமான மைசூரில் வரிகள் குறைவாக இருக்கும்போது, வரி போட மாட்டோம் என்று சொல்கிற நீங்கள் ஏன் அதிக வரி போட்டிருக்...ர்கள்?

அரைகுறை...தேசியமயமாக்கப்பட்டு அரைகுறையாக சாகடிக்கிறீர்கள்.

பஸ்கள் நல்ல முறையில் பராமரிக்கப்படுவதில்லை, என்றார் அனந்தநாயகி.

# குடிசைவாழ் பெண்கள் மறியல்

கோவை, மார்ச் 16—புறம்போக்குநிலத்திலிருந்த சுமார் 300 குடிசைகளை இடிப்பதற்காக புல்டோசர் இயந்திரங்களுடன் அதிகாரிகள் வந்தபோது, அந்த புல்டோசர்களுக்கு முன்னால் குடிசைவாழ் பெண்கள் தங்கள்கைக்குழந்தைகளுடன் படுத்து மறியல் செய்தனர். கோவை நகருக்கு அருகே உள்ள செல்வபுரம் சிந்தாமணி புதூரில் இந்த சம்பவம் நேற்று முன்தினம் நடந்தது.

இந்தப் பகுதியில் உள்ள குடிசைவாழ் மக்களுக்கு குறைந்த ...கையில் வீடு ஒதுக்கப்பட்ட பிறகு, அவர்கள் அந்த குடிசைகளைக் காலி செய்யலாம் என்று முன்பு அதிகாரிகள் அளித்திருந்த வாக்குறுதிகளை குடிசைப் பகுதிமக்கள் சுட்டிக்காட்டியதாக கூறப்படுகிறது.

கடைசியில் புல்டோசர்கள் திரும்பிவிட்டன.

கோவை மாவட்ட அண்ணா தி. மு. க. அமைப்பாளர் மருதாசலம், மார்க்சிஸ்ட் பிரமுகர் கோவிந்தன் ஆகியோர் இது சம்பந்தமாக அதிகாரிகளுடன் தொடர்பு கொண்டு குடிசை வாழ் மக்களின் பிரச்னைகளை எடுத்துக் கூறினார்கள்.

கோவை தேர்தலில் தி. மு. கழகம் தோற்றால், ஒருவாரத்திற்குள் இந்தப்பகுதி குடிசைகள் இடிக்கப்படும் என்று கோவை தேர்தலுக்கு முன்பு இந்த குடிசைப் பகுதி மக்களிடம் தி. மு. க. வினர் மிரட்டியதாக மருதாசலம் குற்றஞ்சாட்டினார்.

அனந்தநாயகிக்கு

# வீராசாமி பதில்: "கப்பல் என்ன? விமானமே விடலாம்"

சென்னை, மார்ச். 16— தமிழகஅரசு சார்பில் பூம்புகார் கப்பல்போக்குவரத்துக் கழகம் அமைக்கப்படுவதை பு...காங்கிரஸ உறுப்பினர் அ...ந்தநாயகி கிண்டல் செய்தார் அல்லவா?

அதற்கு தி. மு. கழக உறுப்பினர் வீராசாமி பதில் அளித்துள்ளார்.

போக்குவரத்து மானியக் கோரிக்கை மீதான விவாதத்தில் கலந்துகொண்டு அவர் பேசும்போது கூறியதாவது:

நாட்டுடமை ஆக்கப்பட்ட பஸ்களில் லாபம் காட்டினாலும் தவறு என்கிறார்கள். தனியார் துறையில் 30 கோடி ரூபாய் லாபங் காட்டியிருப்பார்கள் என்று கூறினார்கள். அகில இந்தியாவிலும் பஸ் போக்குவரத்து எப்படி நடக்கிறது? ஆந்திராவிலும் லாபம் குவிந்தா இருக்கிறது? மராட்டியத்தில் பஸ் ஓட்ட முடியாது என்று கூறி மத்திய அரசு 2 கோடி ரூபாய் மானியம் அளிக்கும் நிலை உருவாகியுள்ளது. இப்போது எண்ணெய் விலை உயர்வு காரணமாக நாட்டுடமை ஆக்கியிருக்கவில்லை என்றால் ஏழைகள் எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பார்கள்?

நாட்டுடை...ம ஆக்கப்படுவதன் மூலம் அரசுக்கு என்ன லாபம் என்று பார்ப்பதைவிட சமுதாயத்திற்கு என்னலாபம் என்றுதான்பார்க்கவேண்டும். தனியார் துறையில் தொழிலாளர்களுக்கு என்ன உரிமை இருக்கிறது. முன்பு இருந்த பல குறைபாடுகளைப் போக்க நடவடிக்கை எடுத்து வருகிறோம்.

மத்திய அரசின் அதிகாரத்திற்கு உட்பட்ட கப்பல் போக்கு வரத்து துறையில் எப்படி தலையிடலாம் என்று கேட்டார்கள்,

ஹாஜா ஷெரீப் கப்பல் விடும்போது. மாநில அரசு, விடக்கூடாதா?

நாட்டுமக்களுக்கு நன்மை ஏற்படுமானால், கப்பல் என்ன ஆகாய விமானம் கூட விடலாம்.

இவ்வாறு வீராசாமி பேசினார்.

# ரெயில் மோதி வாலிபர் மரணம்

கோவை, மார்ச் 16— கோவை அருகே ரெயிலில் அடிபட்டு நெசவுதொழிலாளி ஒருவர் பரிதாபமாக மாண்டார்.

கோவை இரத்தினபுரியைச் சேர்ந்த இந்த வாலிபரின் பெயர் சென்னராஜ். வயது 19. கைத்தறி நெசவுத் தொழில் செய்து பிழைத்து வந்தார்.

இவர் இரத்தினபுரியில் இருந்து ரெயில்வே லைன் வழியாக சென்று கொண்டிருந்...ர். ஆவரம்பாளையம் அருகே வரும்பொழுது திடீரென்று ரெயில் வந்தது. உடனே தண்டவாள லைனை விட்டுக் கீழே இறங்க முயன்றார்.

ஆனால் இதற்குள் அவர் மீது ரெயில் மோதியது. மோதிய வேகத்தில் சென்னராஜின் உடல் துண்டிக்கப்பட்டது. அதே இடத்தில் அவர் பரிதாபமாக துடிதுடித்து இறந்து போனார்.

இதுபற்றி கோவை ரெயில்வே போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் சௌகத் அலி, ஏட்டு வீரமுத்து ஆகியோர் புலன் விசாரணை செய்து வருகின்றனர்.

# தனியார்துறை வேலைகளுக்கு ஆள் எடுப்பதில் மாறுதல் வரலாம்

புதுடெல்லி, மார்ச் 16— தனியார் துறை நிறுவனங்களு... வேலை தேடித் தருவதற்கு உதவும் நிலையங்கள் மூலமாகவே ஆள் எடுத்தாக வேண்டும் என்று கட்டாயமாக்குவதுபற்றி அரசு ஆலோசித்து வருகிறது என்று மக்கள் சபையில் தெரிவிக்கப்பட்டது.

பொதுத்துறை நிறுவனங்களில் ரூ. 500-க்கு குறைவாக உள்ள வேலைகளுக்கு இந்த நிலையங்கள் மூலமாகவே ஆள் எடுத்தாக வேண்டும் என்ற கட்டாயம் உள்ளதாக துணை மந்திரி பலகோவிந்த வர்மா கூறினார்.

இந்த நிலையங்கள் மூலமாகவே ஆள் எடுத்தாக வேண்டும் என்று சில மாநிலங்களுக்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. மீதி மாநிலங்களுக்கும் இம்முறையைப் பின்பற்ற வேண்டுகோள் விடப்பட்டுள்ளது என்றும் அவர் கூறின...

# ரேஸ் செய்தி

## "டர்ப் குவீன்" வெற்றி பெறத் துடிக்கிறது

சென்னை, மார்ச் 16—நாளைய ரேசில் ஈரானி கப் பந்தயத்தில் வெற்றிபெற டர்ப் குவீன் குதிரைக்கு நல்ல வாய்ப்பு உள்ளது.

முன்னர் இரண்டாவது வகுப்பில் சுலபமாக வெற்றி பெற்ற இக்குதிரை முதல் வகுப்புக்கு மாற்றப்பட்டுள்ளது. சிறந்த தரத்தில் உள்ள இக்குதிரை வெற்றி பெறத் துடிக்கிறது.

நாளைய ரேசில் ஓடும் குதிரைகள், ஜாக்கிகளின் பெயர்கள், டிரா நம்பர் டிப்ஸ் ஆகியவை கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

### அசுவகோஷ் டிப்ஸ்

1. மடோனு
2. சுல்தான் பர்வீஸ்
3. வால் ஸ்டிரீட்
4. டர்ப் குவீன்
5. கிரேட் டிவைன்
6. சம்மர் கோர்ட்

நிச்சய வெற்றி

சம்மர் கோர்ட்

**1. மகாபலிபுரம் பிளேட்**
1200 மீட்டர் 2-45 மணி
1. ராயல் டர்க் 60-00 என். அகமது—2
2. மடோனு 59-50 கரன்சிங்—3
3. நோபிள் வெஞ்சர் 54-00 எஸ. மார்ஷல்—1

டிப்ஸ்:
1. நோபிள் வெஞ்சர்

**2. கத்தியவார் பிளேட்**
1200 மீட்டர் 3-25 மணி
1 சுல்தான் பர்வீஸ் 60-00 என். அகமது—5
2 சன்ரைஸ் 54-0 ஜி. கா[illegible]—1
3 பிளாக் [illegible] 52- 0 சுகுமார்—2
4 கிரேபெர்ள் 48-00 கதம்—3
5 கோல்டன் பிரேஸ்லட் 48-00 எல். மார்ஷல்—4

டிப்ஸ்:
1. சன்ரைஸ்
2. கிரேபெர்ள்

**3. ராஞ்சி பிளேட்**
1000 மீட்டர் 4·00 மணி
1 ஆப்பிரிக்கன்ஸ்டார் 54-00 டிக்சன்—7
2 ரோமன்ஈகிள் 54-00 கலந்தர்—4
3 வால்ஸ்டிரீட் 52-50 ரெட்டி—8
4 ரோட் ரன்னர் 52-50 நாதுசிங்—3
5 டுவைல்ட் ஷிம்மர் 52-50 பிடஸ் ஜெரால்ட்—2
6 சொரையா 52-50 கீர்த்திசந்த்—5
7 பிரெய்ரி பிளவர் 52-50 எஸ். மார்ஷல்—6
8 ரிவர் போர்ட் 52-50 புஞசா—9
9 மாடில்டா 52-50 மகமதுகான்—1

டிப்ஸ்:
1. மாடில்டா
2. ஆப்பிரிக்கன் ஸ்டார்

எதிர்பாராத வெற்றி: பிரெய்ரி பிளவர்

**4. பருக் கே. ஈரானி தங்கக் கப்**
1200 மீட்டர் 4-40 மணி
1 பேர் பிளே 60-00 எஸ். மார்ஷல் - 2
2 ஒண்டர் ஓர்க்கர் 59 50 போலி - 3
3 ஜிக்ரி தோஸ்த் 58-50 கரன்சிங்—5
4 காட்ஸ் கிப்ட் 57-50 மனுசே—4
5 டர்ப் குவீன் 56-50 ரெட்டி—1

டிப்ஸ்:
1. டர்ப் குவீன்
2. ஜிக்ரி தோஸ்த்

**5 சேலம் பிளேட்**
1200 மீட்டர் 5-15 மணி
1 டெஸடமோனு 60-00 கரன்சிங் - 7
2 வெனிஷியா 60-00 டிக்சன்—3
3 புஞு பிரிண்ட் 52-00 ஆஜாத்—1
4 கிரேட் டிவைன் 50-00 என். அகமது—2
5 ஈவன்டைம் 49-50 புஞசா— 6
6. கே. டான்சர் 48-50 மகமது அகமது—5
7. பிரின்சஸ் ஜெயம் 47-50 கதம் - 4

டிப்ஸ்:
1. டெஸ்டமோனு
2. கிரேட் டிவைன்
3. பிரின்சஸ் ஜெயம்

எதிர்பாராத வெற்றி வெனிஷியா

**6. எட்சம் பிளேட்**
1200 மீட்டர் 5-50 மணி
1 பஞ்சாபி மெய்ட் 60-00 பெரிஸ்—1
2 சம்மர் கோர்ட் 54-00 புஞசா— 2
3 கிங்ஸ் புரோலிக் 52-00 கரன்சிங்—3
4 சான் மார்க்கோ 49-00 கிருபால் சிங்—4
5 தி ஜோக்கர் 47-50 மகமது அகமது—5

டிப்ஸ்:
1. சம்மர் கோர்ட்
2. சான் மார்க்கோ

ஜாக்பாட்: 2, 3, 4, 5, 6-வது பந்தயங்கள்.

டிரெபிள்: 4, 5, 6-வது பந்தயங்கள்.

டபுள்: 5, 6-வது [illegible]தயங்கள்.

தனலா: 3-வது பந்தயம்.

எக்சாக்டா: 5-வது பந்தயம்.

## இன்றைய சினிமா

சென்னை
[illegible]ராம் மாணிக்கத் தொட்டில்
[illegible]ராஸ் சொல்லத்தான் நினைக்கிறேன்
நேஷனல் படிக்காத மேதை
நியூ எல்பின்ஸ்டன் SAPA MOSHAM
தாம்பரம்
நேஷனல் மாணிக்கத் தொட்டில்
எம். ஆர். தியேட்டர் சமையல்காரன்
ஸ்ரீசித்ரா அப்பா அம்மா
வில்லிவாக்கம்
[illegible]ராயல்: பத்துமாத பந்தம்
குரோம்பேட்டை
வெற்றி: 'பிரபாத்' இந்தி



## நெசவாளர் கடன் ரத்தானதுபோல

# பொற்கொல்லர் கடன் ரத்தாகிறது: கருணாநிதி அறிவிப்பு

சென்னை, மார்ச் 16—தங்கக் கட்டுப்பாடு சட்டம் கொண்டு வரப்பட்டபோது, பொற்கொல்லர்களுக்கு வழங்கப்பட்ட கடன்கள் ரத்து செய்யப்படும். இந்தத் தகவலை முதல் அமைச்சர் கருணாநிதி நேற்று வெளியிட்டார்.

"2 அல்லது 3 கோடி ரூபாய் வரை நெசவாளர்கள் கடன் தரவேண்டியவர்களாக இருக்கிறார்கள்" என்றும் கருணாநிதி குறிப்பிட்டார்.

தமிழக மேல்-சபையில், வரவு-செலவு திட்டம் (பட்ஜெட்) மீது நடந்த விவாதத்துக்கு நேற்று பதில் அளிக்கையில் அவர் கூறியதாவது:—

நெசவாளர்களுக்கு கொடுக்கப்பட்ட கடனை ரத்து செய்தது போல, பொற்கொல்லர்களுக்கு உள்ள கடனை ரத்து செய்ய வேண்டும் என்று இங்கே சொன்னார்கள்.

பொற்கொல்லர்களுக்கு உள்ள கடனை ரத்து செய்வதற்கு மாநில அரசு தயாராக இருக்கிறது. மொத்தம் 2 அல்லது 3 கோடி ரூபாய் அளவுக்கு அவர்கள் கடன் தர வேண்டியவர்களாக இருக்கிறார்கள்.

பொற்கொல்லர் கடன்எந்த சட்டத்தால் வந்தது என்பது உங்களுக்குத்தெரியும். அதைக் கொண்டுவந்தவர் இப்போது உண்ணாவிரதம் இருந்து கொண்டிருக்கிறார். அந்த சட்டத்தின் காரணமாக வந்த கடன் அது.

அந்தக் கடனை நான் ரத்து செய்கிற நேரத்தில் மத்திய அரசும் பாதிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டிருக்கிறேன். அவர்கள் ஏற்றுக்கொள்வார்களென்று நம்புகிறேன்.

### எப்படியும்...

எப்படியும் அவர்கள் ஏற்றுக்கொண்டோ, அல்லது அவர்கள் ஏற்றுக்கொள்ளாவிட்டால் நாமே முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டு, பொற்கொல்லர்களின் கடன் ரத்து செய்யப்படும் என்ற உறுதியை மாத்திரம் இங்கே தெரிவித்துக் கொள்கிறேன். (கைதட்டல்)

### தமிழுக்கு ஒரு தொகை

சிலம்புசெல்வர் தமிழுக்கு ஒரு தொகை ஒதுக்கப்படவில்லை என்பதை தன்னுடைய மனக்குறையாக இங்கே எடுத்துச் சொன்னார்.

அவர்களே அதற்கு ஒரு சமாதானமும் சொல்லிக் கொண்டார்கள். கல்விக்காக ஒதுக்கப்படுகின்ற தொகையில் தமிழுக்கும் போய்ச்சேருகிறது என்றாலும், தமிழுக்கு என்று தனிப்பட்ட முறையில் அந்தக் காரியம் நடைபெற வேண்டும் என்றும் குறிப்பிட்டார்.

தமிழுக்காக— தமிழர்களுக்காக— தமிழ் சமுதாயத்துக்காக— தமிழ் மரபு காக்கப்பட வேண்டும் என்பதற்காக— தமிழர்களின் நாகரிகம், பண்பாடு, கலாசாரம் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதற்காக, நம்முடைய சிலம்புச் செல்வரைப் போன்றவர்கள் எடுத்துச் சொல்லுகின்ற எந்தக் காரியங்கள் ஆனாலும், இந்த அரசு தட்டிக் கழித்தது இல்லை என்பதை இந்த நாடு நன்றாக உணரும்.

தமிழரின் வளர்ச்சிக்கு ஒரு தனித் தொகை ஒதுக்குகின்ற அளவுக்கும் நிச்சயமாக ஒரு தனித் தொகை ஒதுக்கப்படும் என்பதுவும், அதுபற்றி பரிசீலித்து விரைவில் அறிவிக்கப்படும் என்பதையும் இந்த அவையில் எடுத்துக்கூற கடமைப்பட்டு இருக்கிறேன்.

### "அகர முதலி" அகராதி

நம்முடைய அடிகளார் பேசுகிற நேரத்தில், பாவாணர் அவர்களுடைய "அகர முதலி" என்ற அகராதியை தயாரிப்பதற்கு அரசு நல்ல முறையில் செலவிடவேண்டும் என்று தெரிவித்து இருக்கிறார்.

அது குறித்து பாவாணர் அவர்களிடத்தில் தொடர்பு கொண்டபோது கல்விஅமைச்சர் பல விவரங்கள் தெரிந்து வைத்திருக்கிறார்.

அகராதியை தயாரிப்பதற்கு ஆகும் செலவு அதிகமாகின்ற காரணத்தினாலதான் அதிலே தயக்கம் ஏற்பட்டு இருக்கிறது.

அடிகளார் மீண்டும் பாவாணரிடம் தொடர்புகொண்டு, குறிப்பிட்ட தொகைக்குள் அதைதயாரிக்க முன்வருவார்களேயானால் அதற்கு இந்த அரசு உதவிசெய்ய சித்தமாக இருக்கிறது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்,"

இவ்வாறு கருணாநிதி கூறினார்.

### நீர் மட்டம்

சென்னை, மார்ச். 15—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 6·03 | மீட்டர் |
| பெரியாறு | 3·94 | ,, |
| வைகை | 16·92 | ,, |
| பாபநாசம் | 19·90 | ,, |
| கிருஷ்ணகிரி | 12·88 | ,, |
| சாத்தனூர் | 29·67 | ,, |
| மணிமுத்தாறு | 30·80 | ,, |
| பேச்சிப்பாறை | 1·13 | ,, |
| பெருஞ்சாணி | 0·89 | ,, |

## தி. மு. க. வெளி நடப்பு

புதுடெல்லி. மார்ச் 16— நேற்று ராஜ்ய சபையில் எக்கு இலாகா உதவி மந்திரிக்கு கண்டனம் தெரிவிக்கும் வகையில் ஜி.எஸ். அப்பன் (திமுக) வெளிநடப்பு செய்தார்.

தாம் ஆங்கிலத்தில் கேட்ட கேள்விக்கு அந்த உதவிமந்திரி இந்தியில் பதில் அளித்ததாக கூறி அதற்கு அப்பன் கண்டனம் தெரிவித்தார்.

அரிஜன உறுப்பினரான தமது கேள்விக்கு எக்கு இலாகா மந்திரிக்கு பதிலாக தாழ்த்தப்பட்ட வகுப்பினரைச் சேர்ந்த உதவி மந்திரி பதில் அளித்தது பற்றியும் அப்பன் கண்டனம் தெரிவித்தார்.

# பள்ளிக்குச் செல்லும் வழியில் மாணவி கடத்தல் வேலூரில் பரபரப்பு

வேலூர், மார்ச் 16—பள்ளிக் கூடத்திற்குச் செல்லும் வழியில் 16 வயது மாணவி ஒருத்தி காரில் கடத்திச் செல்லப்பட்டாள். இதன் காரணமாக வேலூரில் பெரும் பரபரப்பு காணப்படுகிறது.

வேலூரைச் சேர்ந்த ஆறுமுகத்தின் மகள் மதனா. 16 வயதான அவள், வேலூர் நகரசபை ஆரம்ப பள்ளிக்கூடத்தில் 8-ம் வகுப்பு படித்து வருகிறாள்.

நேற்று பகல் 12-30 மணி அளவில் மதனா, பள்ளிக்கூடத்துக்கு போய்க்கொண்டு இருந்தாள்.

### காரில் தூக்கிப் போட்டனர்

அப்போது திடீரென்று வாடகை கார் ஒன்று வந்து நின்றது. காரில் இருந்தவர்களில் ஒருவர், மதனாவை தூக்கி காருக்குள்போட்டார்.

உடனே கார் ஓடி மறைந்து விட்டது. பக்கத்தில் இருந்த ஆசிரியர்களும். மாணவிகளும் அதைக் கண்டு கூச்சல் போட்டனர். ஆனால் பலன் இல்லை. ஆசிரியர் ஒருவர், வாடகை காரின் எண்ணை குறித்துவைத்து போலீசில் தெரிவித்தார்.

இதுபற்றி வேலூர் வடக்கு பகுதி போலீசார் வழக்கு பதிவு செய்து விசாரணை நடத்திவருகிறார்கள்.

மாணவியை கடத்திசென்ற கார் பற்றி எல்லா போலீஸ் நிலையங்களுக்கும் தகவல் அனுப்பப்பட்டுள்ளது.


Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-600028, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.
Chief Editor: S. V. G. Sowrirajulu.
Honorary Editor: N. Muthukumarasamy.


# அன்னிய செலாவணி விதி மீறல்: ரூ.83 லட்சம் பிடிபட்டது

புதுடெல்லி, மார்ச் 16— 67 லட்சத்து 92 ஆயிரத்து 606 ரூபாய் பெறுமான இந்திய ரூபாய் நோட்டுகளையும், சுமார் 16 லட்சத்து 70 ஆயிரத்து 325 ரூபாய் மதிப்புள்ள அன்னியச் செலாவணியையும் 'என்போர்ஸ்மென்ட்' இயக்குனரகம் சென்ற ஆண்டு கைப்பற்றியிருக்கிறது. 1973-ஆம் வருட அன்னியச் செலாவணி விதிமுறைகளின் கீழ் நடத்தப்பட்ட 1894 சோதனைகளின் போது இந்த நோட்டுகள் கைப்பற்றப்பட்டன.

இதே காலத்தில் 2029 வழக்குகளில் தீர்ப்பு கூறப்பட்டது. இவ்வழக்குகள் அனைத்திலுமாக 1 கோடியே 88 லட்சத்து 79 ஆயிரத்து 695 ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது; 29 லட்சத்து 69 ஆயிரத்து 73 ரூபாய் பெறுமான இந்திய ரூபாய் நோட்டுகளையும், மூன்று லட்சத்து 10 ஆயிரத்து 291 ரூபாய் மதிப்புள்ள அன்னியச் செலாவணியையும் பறிமுதல் செய்யும்படி தீர்ப்புக் கூறப்பட்டது.